புத்தம் சரணம் கச்சாமி
ஸங்கம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி

*யான் புத்தரைச் சரணமாக அடைகிறேன்.*

*யான் சங்கத்தைச் சரணமாக அடைகிறேன்.*

*யான் தர்மத்தைச் சரணமாக அடைகிறேன்.*

# வெளியிடுவோரின் முகவுரை

பகவான் புத்தரின் 2500-வது மஹா பரிநிர்வாணக் கொண்டாட்டம் இவ்வாண்டு மே 24-ம் தேதியன்று தொடங்கியபோது, அப்போதி மாதவரது உபதேச மொழிகளில் மிகச் சிறந்தவற்றைக் கொண்ட ஒரு சிறு நூலை வெளியிடும்படி எம்மிடம் ஒரு வேண்டுகோள் விடுக்கப்பட்டது. மனித ஸமூகத்தினரில் மிகப் பெரும் பகுதிக்கு ஒரு கலங்கரை விளக்கம்போன்று ஒளி சொரியும் அப்பெரியாரின் அழிவற்ற போதனைகள் அனைவர்க்கும் அறிவிக்கப்படுதல் மிகவும் பொருத்தமேயாம்.

நமது 'முரசு' வெளியீடுகள் பலராலும் விரும்பப்படுகின்றன: நாளுக்கு நாள் அவற்றை வேண்டுவோரின் தொகை பெருகிவருகின்றது. ஆதலால் 'புத்தரின் அறமுரசு' எனும் இந்நூலையும் மகிழ்ச்சியோடு அவற்றிற் சேர்க்கலானோம். உயர்ந்த ஞான

வாழ்வினை நாடுவோர் அனைவரும் இம் முரசினையும் விழைவோடு வரவேற்பார்கள் என்பது நமது நம்பிக்கை.

பௌத்த மதத்தின் முக்கிய கொள்கைகள் தொடக்கத்திலே வேறாகக் கொடுக்கப்பட்டுள்ளன. பகவான் புத்தரது வாழ்வின் சுருக்கமும், போதம் பெற்றபின் அவர் ஸாரநாத்தில் இயற்றிய முதல் ஞானப்பிரசங்கமும் சேர்க்கப்பட்டுள்ளன.

பகவான் புத்தரின் மீது சுவாமி விவேகாநந்தர்க்கு உண்டான ஒரு பெருங் கவர்ச்சி அவரது வாழ்க்கை முழுதும் குடிகொண்டு உறைந்தது. புத்த பகவானைப்பற்றி சுவாமிஜி கூறிய உலவா மொழிகளிற் சிலவற்றைக் கொண்டுள்ள ஒரு வேறான பகுதி வாசகர்கட்டுப் பயனையும் ஒளியையும் சொரியும் என்றே நம்புகிறோம்.

கவியரசர் இரவீந்திரநாத தாக்கூர்

பகவான் புத்தரிடம் சமர்ப்பித்த ஒரு வேண்டுகோள் நூலின் தொடக்கத்திலே மேற்கோளாக அமைகின்றது.

உபதேசங்கள் 2500 ஆண்டுகட்கும் மேற்பட்ட பழங்காலத்தே வழங்கப் பட்டன எனினும், அனைவர்க்கும் பொதுவான ஒரு தன்மையைக் கொண்டனவாய், வலிமை செறிந்தன வாய் அமைகின்றன; ஆதலின் எத் துணை நீண்ட காலமும் அவற்றைப் பழமையுற்றனவாகவோ பயனற்றன வாகவோ ஆக்கும் வலியற்றதாகும். எதிர்காலத்தில் பல்லாண்டு பல்லாண் டாக அவை ஒளிசொரிந்து வரும்.

"புத்தரது ஈறிலாத உபதேசத்தின் சிறப்பியல்பாவது: காலஞ் செல்லச் செல்ல அது பயனற்றதாகக் கழிக்கப் படுதற்கு மாருக, பிரகாசம் மிகுந்து, ஒரு கலங்கரை விளக்கம் போன்று இன்றளவும் ஒளிர்ந்து வருகிறது."

## வெளியிடுவோரின் முகவுரை

---

அன்பையும், நிலைத்த சாந்தியையும் பற்றிய, புத்தரது இணையற்ற செய்தி, தினமும் பெருகிவரும் நாசகாரி அணுக்குண்டுகளை இயற்றுவதில் அளவுக்குமிஞ்சி ஈடுபட்டுள்ள இவ்வுலகிலே இந்நாளைக்கு முன்னினும் மிகத் தேவையாய் உள்ளது.

உபதேச மொழிகளிற் சில, நாரத மஹாதீர எனும் துறவியால் இயற்றப்பட்டுள்ள 'தம்மபதம்' எனும் நூலினின்றும், ஸ்ரீ பால் காரஸ் எழுதியுள்ள "புத்தரது உபதேசம்" எனும் நூலினின்றும் பொறுக்கி எடுக்கப்பட்டுள்ளன. இவ்விரு பெரியார்க்கும் எமது நன்றி.

பகவான் ததாகதரின் ஞான ஆவேசமுற்ற இப்பொன்மொழிகள் என்றைக்கும் நமக்கு வழிகாட்டியாக விளங்கி, சோர்வுற்ற மன்னுயிர்க்கு உண்மையான ஆறுதலை ஊட்டுவன வாகுக.

**வெளியிடுவோர்.**

# பொருளடக்கம்

பொருளடக்கம்

## வேண்டல்

தெய்விக வாழ்வே சிறப்புடை
மரணமே

எய்துவென் நின்னையே என்புகலாக.

இருண்ட என்விளக்கினை நினது நெருப்
பினில் ஏற்றுவேனாக.

என்முகம் பதிந்திடும் நின்புகழ் முத்
திரை எனது நாணினை யாண்டும்
நீக்குக.

என்மலர் தன்னையும் இரும்பொன்னாக
மாற்றுந் திறல்மிகும் வன்னி நின்
திருவடி.

என்னுள் இருக்கும் இருண்டன யாவும்
சுடர்விட் டெரிக, பிழைமுக்காடும்
கிழிந்தே யொழிக.

—இரவீந்திரநாத தாக்கூர்

# புத்த தேவர்

பகவான் புத்தர் கபிலவஸ்து நக ரருகேயுள்ள லும்பினிச் சோலையிலே அரசர் சுத்தோதனர்க்கும் மாயா தேவிக்கும் அருங்குமரராய் அவதரித் தார். அவர்க்கு இட்ட திருநாமம் 'சித்தார்த்தன்' என்பது; 'கருதி யதை முடித்துக்கொண்டவன்' என் பது அதன் பொருள்.

அவரது தந்தையார் தமது அரசக் குழந்தையை வந்து காணுமாறு வித்த கரான ஓர் அந்தண முனிவரை அழைத்தனர்; அதைக் கண்டதும் அம்முனிவர் "புதிதாகப் பிறந்த இக் குழந்தை உலக முழுவதையும் உய்விக் கும் என அதனிடத்துள்ள தெய்விகக் குறிகள் தெரிவிக்கின்றன" எனப் பின்னர் நிகழ்வதை முன்னரே மொழிந்

தனர். இவ் இளைஞன் நோயுற்றாரை
யும் மூப்புற்றாரையும் பிணத்தையும்
காண்பானாயின், உலக வாழ்வைத்
துறந்து விடுவான் என்றும் மன்னர்க்கு
எச்சரித்தார். இதைக் கேட்ட அரசர்
பேரச்சமெய்தி, இளமையிலே சித்
தார்த்தனுக்கு மணம்புரிவித்து, பல
வகை இன்பங்களும் நிறைந்த ஒரு பூஞ்
சோலையிலே அவனைச் சிறைப்பட்டார்
போல வாழவைத்தார். ஆனால், சங்
கிலியாற் கட்டப்பட்ட ஒரு யானை
கானகத்தே திரிய ஆசையுறுவது
போல, அரசிளங்குமரனும் உலகத்
தைக் காண அவாவினான். தெருக்கள்
அழகுபடுத்தப்பட்டன, நகரமெங்கும்
விழாக்கோலம் புனையப்பட்டது.
ஆயினும் தடுக்கவொண்ணாதது தானே
நிகழ்ந்தது. நகர் காணச்சென்ற சித்
தார்த்தன் வழியிலே ஒரு கிழவனையும்
ஒரு நோயாளியையும், ஒரு பிணத்தை

ம், இறுதியிலே ஒரு சன்னியாசியை
ம் நோக்கலானான். முதல் மூன்று
ாட்சிகளும் காணவரியனவல்ல என்
ும், உயிருடையார் அனைவர்க்கும்
ுவை தடுக்க முடியாதவாறு விளைவன
ன்றும் கேட்டறிந்த சித்தார்த்தன்
பரிதும் மனங்குழம்பினான், ஆழ்ந்த
ந்தனையின் மூழ்குவானாயினான்.

அரண்மனைக்கு அரசகுமரன் மீண்ட
ும், அவனது மனைவி யசோதரைக்கு
ாகுலன் எனும் பெயர் பூண்ட ஓர்
ண் குழந்தை பிறந்தது என்ற
செய்தியை ஒருவர் அறிவிக்கலானார்.
பந்தத்திற்குமேல் குவிக்கப்பட்ட பந்
ம் அது" என்று சித்தார்த்தர்
னைத்து, உண்மையை நாட, உல
னைத் துறக்கும் உறுதி கொண்டார்.
ம்முடிவைச் செயலளவாக்க நினைந்து,
ிரவில் சித்தார்த்தர் தமது பிறவி

யின் நோக்கத்தை நிறைவேற்று
பொருட்டு, அனைத்தையும் துறந்த
ஒரு முனிவரானார். அவர் உருவில்
(புத்தகயை) என்ற இடத்தை நண்ணி
ஆங்கே ஞான ஒளியைப் பெறும் வி
தம் பூண்டு, ஒரு போதி மரத்தடியி
அமர்ந்தார். ஆறு ஆண்டுகள் கடு
சாதனம் பழகியபின், அவர் பெரிது
அவாவிய ஞான ஒளி அவர்க்கு உத
மாயிற்று; அவர் போதி சத்துவரா
விளங்கி, புதிய உபதேசத்தை
போதிக்கத் தொடங்கினர்.

புத்தர் தமது முதல் ஞானப் பிரச
சத்தை வாரணாசிக்கு அருகுள்ள சா
நாத் என்ற இடத்தில் நிகழ்த்தின
நாற்பத்தைந்து ஆண்டுகாலம் தம
பேருபதேசத்தைப் பரக்கக் கூவி, த
பிறவியின் நோக்கத்தை நி
வேற்றினர். நன்கு அமைக்கப்பட்

சங்கம் ஒன்றையும் நிலைநாட்டினர். பின்னர் ஒரு வைகாசிப் பௌர்ணமி தினத்தன்று, முதிர்ந்த வயதாகிய எண்பதில், குசிநர எனும் இடத்திலே மஹாபரிநிர்வாண நிலையிற் புகுந்தனர். அவர் பிறந்ததும் ஞான விளக்கம் பெற்றதும் அதே மாதப் பௌர்ணமியிலேதான். ஆதலின், வைகாசிப் பௌர்ணமி மூவகையிலே புனிதம் பெற்ற நாளாயிற்று.

பகவான் புத்தர் தமது 'மஹாபரி நிர்வாண சுத்த'த்திலே பின்வருமாறு கூறியுள்ளனர்: தாம் பிறந்த இடமாகிய லும்பினியும், தாமாக ஞான விளக்கம் பெற்ற இடமாகிய புத்த கயையும், தமது 'தம்மசக்கப்பவத்தன சுத்த'த்தை (தர்ம சக்கரப் பிரவர்த்தனம் பற்றிய முதற் பிரசங்கத்தை) நிகழ்த்திய இடமாகிய ஸாரநாத்

எனும் இஸிபட்டணமும், மஹாபரிநிர்வாண நிலையிற் புகுந்த இடமாகிய குசிநர என்பதும்—இந்நான்கும் சமய சிரத்தையையும் கழிவிரக்கத்தையும் பொங்கச்செய்யும் இடங்களாதலின், தம்பால் நம்பிக்கையுடையார்க்கு யாத்திரைக்கேற்ற புனித தலங்களாகும்.

பலரும் அறிந்தபடி யாம் பௌத்தர்களல்லரெனினும், அவரைப் பத்து அவதாரங்களுள் ஒருவராக வழிபடுகிறோம். மஹாத்மா காந்திஜி கூறுகிறபடியே: "புத்தரின் போதனைகளில் முக்கியமான பகுதி இப்போது இந்து மதத்தின் முழுமைக்கு அவசியமான ஒரு பகுதியாகிவிட்டது. இந்து இந்தியா சென்ற வழியே மீண்டு, கௌதமர் இந்து மதத்திற்குச் செய்த பெருஞ் சீர் திருத்தத்திற்கு முன்னிருந்த

காலத்திற்குப் பின் செல்லுதல் இன்று இயலாததாகும். அவர் தம் தன்னலப் பலியின் பேரளவாலும் பெருந்துறவாலும், மறுவற்ற தூய்மையாலும், இந்து மதத்தின்மீது அழியாத முத்திரை யொன்றைப் பதித்தனர்; அதனால் அம்மாகுரவர்க்கு அது எந்நாளும் கடன்பட்டதாயிற்று. இந்து மதத்தின் தலைசிறந்த பகுதியைத் தம்மிடம் தெவிட்டுநிலை வரும்வரை அவர் ஊட்டிக்கொண்டு, வேதங்களிலே புதைந்து கிடந்தனவும், செழித்து வளர்ந்த கிளைகளால் மூடப்பட்டிருந்தனவுமான சில போதனைகட்குப் புத்துயிர் அளித்தனர்."

அவர் 'ஆசிய சோதி' மட்டுமன்று 'உலக சோதி'யும் ஆவார். மன்னுயிரின் ஞான முன்னேற்றம், பண்பாட்டு முன்னேற்றம் இரண்டிற்கும் அவர்

ஈந்த நன்கொடை அளக்கலாகாப் பெருமையது; அவரது வாழ்வும் போதனைகளும் இலக்ஷக்கணக்கான மக்களின் அன்றாட வாழ்வையும் நல்ல பாக்களையும் தூண்டியுள்ளன.

அன்பும் அருளும் உருக்கொண்ட பகவான் புத்தர் நம் அனைவர்மீதும் தம் ஆசிகளைப் பொழிவாராக!

ா

---

# புத்தரைப்பற்றி சுவாமி விவேகானந்தர்

"இந்தக் கருமயோக போதனையை உண்மையாகவே செயலளவாக்கிய ஒரு மனிதரைப்பற்றி முடிவாக ஒரு சில வார்த்தைகளை உங்கட்குச் சொல்லுகிறேன். அம்மனிதர் புத்தரே. எப்போதும் இதைப் பூரணமாகப் பழக்கத்திற்குக் கொணர்ந்தவர் அந்த ஒரு மனிதரே. புத்தர் ஒழிந்த ஏனைய உலக குரவர்கட்கு, அவர்களைத் தன்னலமற்ற செயல்களை இயற்றும்படித் தூண்டுதற்குப் புறநோக்கங்கள் இருந்தன......குறிப்பின்றிச் செயல் புரியும் இலக்ஷிய கருமயோகி அவரே; அவரே இதுகாறும் பிறந்தவர்க்குள் உயர்வற உயர்ந்த மனிதராய், இணையற்றவ

ராய், அன்பும் அறிவும் ஒருங்கே இணைந்த—இதுவரை கண்டிராத—உயர்வற உயர்ந்த ஓர் இணைப்பாய், இந்நாள்வரை வெளிப்பட்டிராத மிக உயர்ந்த ஆன்ம சக்தியாய் இருந்த தற்கு மன்னுயிரின் சரிதமே சான்று பகர்கிறது ....."

"பௌத்தமே, வரலாற்று முறை யிலே நோக்குங்கால், மிக முக்கிய மான மதமாகும். இது வரலாற்று ரீதியிலேயன்றித் தத்துவ ஆராய்ச்சி ரீதியிலே அன்று என்க; காரணம் யாதெனில், இவ்வுலகம் என்றேனும் கண்டவற்றுள் மிகப்பெரியதான சமய இயக்கம் அதுவே; அன்றியும் மனித ஸமுதாயத்தின்மீது தாக்கியவற்றுள் மிகப்பெரும் வலிமை பெற்றிருந்த ஞான அலையும் அதுவே......"

# நான்கு விழுமிய உண்மைகள்

1. துக்கத்தின் இருப்பு
2. துக்க காரணம்
3. துக்க நீக்கம்
4. துக்க நீக்கமாகிய நிலையினிற் செலுத்தும் நெறி.

# பஞ்ச சீலம்

(ஐந்து போதனைகள்)

1. கொல்லாமை பற்றிய போதனையைக் கொள்க.

2. கள்ளாமை பற்றிய போதனையைக் கொள்க.

3. சோரம் போகாமை பற்றிய போதனையைக் கொள்க.

4. பொய்யாமை பற்றிய போதனையைக் கொள்க.

5. கள்ளுண்ணாமை பற்றிய போதனையைக் கொள்க.

---

# எண்வகை நெறி

1. நல் அறிவு (மூடக் கொள்கையும் மயக்கமும் அற்றது).
2. நல் நினைவு (உயர்வானதும், அறிவுடையார்க்கு ஏற்றதும்).
3. நற் பேச்சு (அன்பார்ந்தது, கரவற்றது, மெய்யானது).
4. நற் செயல் (சாந்தமும் நேர்மையும் தூய்மையும் வாய்ந்தவை).
5. நல் வாழ்வு (எவ்வுயிர்க்கும் துன்பமோ ஆபத்தோ விளையாமை).
6. நன் முயற்சி (தற்பயிற்சியிலும் தன்னடக்கத்திலும்).
7. நல் விழிப்பு (சுறு சுறுப்பான கவனமுள்ள மனம்).
8. நல் ஒருமை (வாழ்க்கையின் மெய்ம்மைகளைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில்).

# புத்தரின் போதனைகள்

1. கொல்லாதே.
2. களவு செய்யாதே.
3. விபசாரம் செய்யாதே.
4. பொய் பேசாதே.
5. பழி தூற்றாதே.
6. கடுமொழி சொல்லாதே.
7. வம்பு பேசாதே.
8. பிறர் பொருளை இச்சியாதே.
9. பகைமை கொள்ளாதே.
10. நேர்மையாக நினை.

---

# புண்ணியச் செயல்கள்

1. தக்கார்க்கு அறஞ் செய்
2. ஒழுக்க போதனைகளைப் பற்றி நில்
3. நல்ல நினைவுகளைப் பயிர் செய்து வளர்த்து வா.
4. பிறர்க்குப் பணிசெய், பிறரைக் கவனித்துக் கொள்.
5. பெற்றோரையும் மூத்தோரையும் மதித்து வேண்டுவன இயற்று.
6. உன் புண்ணியங்களில் ஒரு பகுதியைப் பிறர்க்கு அளி.
7. பிறர் உனக்குக் கொடுக்கும் புண்ணியங்களை ஏற்றுக் கொள்.
8. நேர்மைக் கொள்கையைக் கேட்டுணர்.
9. நேர்மைக் கொள்கையைப் பிறர்க்குப் போதி.
10. உன் குற்றங்களை நீக்குக.

---

# மூன்று எச்சரிக்கைகள்

1. உலகிலே எண்பதோ தொண்ணூறோ நூறோ வயததடைந்த ஒரு கிழவனோ, கிழவியோ மெலிந்து, வளைந்து, கீழே குனிந்து, கோலூன்றி நின்று, கால்கள் தள்ளாட, பலங்குன்றி, பண்டைய இளமை கழியப்பெற்று, உடைந்த பற்களோடும், நரைத்த அற்பமான குடுமியோடோ வழுக்கைத் தலையோடோ, உறுப்புக்கள் செம்புண்ணாகித் திரைவிழுந்த நிலையில் இருந்ததை ஒருநாளும் நீ கண்டதில்லையா ?

நீயும் அழிவுக்கு உள்ளாவாய், அதற்குத் தப்ப உனக்கும் இயலாது என்ற

நினைவு உன்னிடம் ஒருபோதும் எழுந்த தில்லையா ?

* * *

2. உலகிலே ஓர் ஆணோ, பெண்ணோ, நோயுற்றும், துன்புற்றும், பிணி முற்றியும், தன் சொந்த மலத்திலே புரண்டுகொண்டிருக்கும் நிலையில், சிலரால் தூக்கியெடுக்கப்பட்டு, பிறரால் கிடத்தப்பட்டதை ஒருநாளும் நீ கண்டதில்லையோ !

நீயும் நோய்க்கு உள்ளாவாய், அதற்குத் தப்ப உனக்கும் இயலாது என்ற நினைவு உன்னிடம் ஒருபோதும் எழுந்த தில்லையா ?

* * *

3. உலகிலே ஆணின் பிணமோ, பெண்ணின் பிணமோ, இறந்து ஒன்

றிரண்டு மூன்று நாள்கட்குப் பின்னர்,
ஊதிக் கருநீல நிறம் பெற்று, அழுகி
யிருந்ததை ஒரு நாளும் நீ கண்ட
தில்லையா!

நீயும் சாவிற்கு உள்ளாவாய், அதற்
குத் தப்ப உனக்கும் இயலாது என்ற
நினைவு உன்னிடம் ஒருபோதும் எழுந்த
தில்லையா!

# ஸாரநாத்தில் முதல் ஞானப் பிரசங்கம்

ஐந்து பிக்ஷுக்களையும் நோக்கிப் பகவான் கூறியதாவது :

ததாகதரை (பூரணம் எய்தியவரை) அவரது பெயர் கொண்டு அழையாதே; அவரை "நண்பீர்" என்றும் கூப்பிடாதே; ஏனெனில் அவர் புத்தராவார், புனிதராவார்; புத்தர் அன்பார்ந்த நெஞ்சமொடு அனைத்துயிர்கள்மீதும் சமமாக நோக்குகிறார்; அதனால் அனைவரும் அவரை 'எந்தையே' என்றழைப்பர் தந்தைக்கு அவமரியாதை செய்வது தவறு, அவரை இழிவு படுத்துவது பாவம்.

* * *

ததாகதர் தவத்திலே முத்தியை நாடுவதில்லை; ஆனால் அக்காரணம் பற்றி அவரை உலக போகங்கள் நுகர்பவர் என்று நீ கருதக்கூடாது; நிறை செல்வத்தின் நடுவே அவர் வாழ்பவரு மல்லர். ததாகதர் ‘நடுவழியை’க் கண்டு பிடித்துள்ளவர்.

* * *

மீனோ ஊனோ உண்ணாமையோ, ஆடையின்றித் திரிதலோ, மழித்தலோ, சடை தரித்தலோ, முரட்டாடை அணிதலோ, அழுக்கைப் பூசிக்கொள்ளுதலோ, அக்கினி தேவர்க்கு வேள்வி இயற்றுதலோ மயக்கந் தெளியாத ஒரு மனிதனைத் தூய்மையாக்காது.

* * *

வேதமோதுதலும், குருமார்க்குக் காணிக்கையோ தெய்வங்கட்குப் பலிகளோ இடுதலும், வெப்பத்தாலோ தட்பத்தாலோ உடலை வருத்துதலும், சாவா நிலையை அடைதற்கென இயற்றும் அத்தகைய தவங்கள் பலவும்— இவை மயக்கந் தெளியாத மனிதனைத் தூய்மைப் படுத்தமாட்டா.

* * *

சினம், குடி, பிடிவாதம், மதவெறி வஞ்சகம், பொறாமை, தற்புகழ்ச்சி, பிறரை இகழ்தல், தருக்கு, தீய நினைவுகள்—இவையே துப்புரவின்மையாம்; உண்மையாகவே, ஊனைத் தின்னுதலன்று.

* * *

பிக்ஷுக்களே (துறவிகளே), இரு

கோடிகளினின்றும் விலகியுள்ள நடு வழியை உங்கட்கு நான் போதிக்கட்டும். துன்புறுவதனால், மெலிவடைந்த அன்பன் தன் மனத்திலே குழப்பத்தையும் பிணியாளர்க்குள்ள நினைவுகளையும் விளைத்துக்கொள்கிறான். உடலை வருத்துதல் உலகியல் அறிவு பெறுவதற்கும் உதவியாகாது எனின், ஐம்புலனை வெற்றிகொள்ளற்கு எத்துணைக் குறைவாக உதவுவதாகும்!

* * *

தன் விளக்கில் நீரை ஊற்றி நிரப்புபவன் இருளைப் போக்கடிக்கமாட்டான்; அழுகிக் கெட்ட மரத்தைக் கொண்டு தீ மூட்ட முயல்பவன் தவறுவான்.

* * *

உடலை வருத்தும் தவ முயற்சிகள் இன்னாதன (துன்பந்தருவன) வறிதாவன, பயனற்றன. ஒருவன் காமத் தீயை அணைப்பதில் வெற்றிபெருனயின், கெட்ட வாழ்வு நடத்துவதால் அவன் எவ்வாறு தானற்ற நிலை எய்துவான்!

* * *

தான் என்ற பொருள் உள்ள அளவும், உலக போகங்களையோ சுவர்க்க போகங்களையோ தான் ஆசையொடு தொடர்ந்து நாடும் வரையும், எவ்வகைத் துன்புறுத்தலும் வீணே. ஆனல் தான் அற்றவனே காமமற்றவனுவான்; அவன் உலக போகங்களையோ சுவர்க்க போகங்களையோ விரும்பான்; அவன் இயற்கைக் குறை

களை நிரப்புவதனால் அழுக்குறுன். உடலின் தேவைகட்கு ஏற்றவாறு அவன் உண்ணவும், பருகவும் செய்யலாம்.

* * *

தாமரை மலரை நீர் சூழ்கின்றது; ஆனால் அதன் இதழ்களை அது நனைப்பதில்லை. இதற்கு மாறாக, எவ்விதப் புலன் நுகர்ச்சியும் (இந்திரிய சுகமும்) தளர்ச்சியைத் தருகின்றது. போகம் நுகர்வோன் தன் இச்சைகட்கு அடிமையாவான்; சுகத்தேட்டம் இழிவுபடுத்தும், கேவலமாக்கும்.

* * *

வாழ்விற்குரிய தேவைகளை நிறை வாக்கல் கேடன்று. உடலை நன்னிலை யில் வைத்திருத்தல் கடமையே; அன் றேல், ஞான விளக்கைத் தூண்டவும்,

மனத்தை உறுதியாகவும் தெளிவாகவும் வைத்திருக்கவும் இயலாதவராவோம்.

* * *

பிக்ஷுக்களே, இரு கோடிகளினின்றும் விலகியிருக்கும் 'நடுவழி' இதுவே.

* * *

பகவான் புத்தர் தம் சீடர்களிடம் அன்புடன் உரையாடுவர், அவர்கள் இயற்றும் பிழைகட்காக மனமிரங்குவர், அவர்களுடைய முயற்சிகளின் பயனின்மையை எடுத்துக் காட்டுவர் ; அவர்களுடைய நெஞ்சங்களைச் சில்லிட்ச் செய்யும் பகைமைப் பனிக்கட்டி குரவரின் தூண்டுதல் எனும் மென் சூட்டினால் உருகிப் போய்விடும்.

## தர்ம சக்கரப் பிரவர்த்தனம்

(அறக்கதிராழி திறப்பட உருட்டல்)

பகவான் சாரநாத்திலே மிக்க நல் அறமாகிய ஆழியை (தர்ம சக்கரத்தை) உருட்டத் தலைப்பட்டார். ஐந்து பிக்ஷுக்கட்கும் போதிக்கத் தொடங்கிய அவர் அமரநிலைக் கதவினை அவர்கட்குத் திறந்துவைத்து, நிருவாண சுகத்தினை அவர்கட்குக் காட்டினர். பகவான் தமது போதனையைத் தொடங்கியபோது, அகில உலகெங்கும் பேரின்பப் புளகம் உண்டாயிற்று.

புத்தர் அருளியதாவது :

தூய ஒழுக்க விதிகளே அச்சக்கரத்தின் ஆரக்கால்கள் ஆவன; நீதியே அவற்றின் நீளத்தில் வேறுபாடின்மை; ஞானமே அதன் பட்டை; நாணமும்

சிந்தனையுமே, மெய்யெனும் அசையா இருசு செருகப்பட்டுள்ள குடம்.

* * *

துயரத்தின் உண்மையையும், அதன் காரணத்தையும், அதனை ஒழிக்கும் வகையையும், அதன் நிவாரணத்தையும் உணர்பவன் நான்கு விழுமிய உண்மைகளின் ஆழங்கண்டவனுவான். அவன் நல்ல நெறியிலே நடப்பான்.

* * *

நல்ல கருத்துக்கள் அவனது வழியிலே ஒளி சொரியும் தீவட்டியாகும். நல்ல நோக்கங்கள் அவனுக்கு வழி காட்டியாகும். நல்ல மொழிகள் பாதையிலே அவற்குத் தங்கும் இடமாம். அவனது நடை நேரானதாகும்; ஏனெனில் அதுவே அவனது நன்னடத்தையாகும். அவனது சிற்றுண்டி

தன் வாழ்விற்காக வகுக்கும் நல்ல பாதையாகும். நன் முயற்சிகள் அவன் எடுத்துவைக்கும் அடிகளாகும்; நல்ல நினைவுகள் அவனது மூச்சாகும்; அவனது அடித்தடத்தைப் பின்பற்றி அமைதி தொடர்ந்து வரும்.

* * *

அப்போது பகவான் அகங்காரத்தின் நிலையாமையை விரித்துரைக்கலானார்:

உற்பத்தியுடையது யாதும் மீண்டும் அழிவடையும். தன்னைப்பற்றிய கவலையெல்லாம் ஒருவற்கு வீணாகும்; அகங்காரம் கானல் போன்றது; அதனைச் சாரும் பேரிடர்கள் யாவும் கழிந்துவிடும். உறங்குபவன் விழிக்குங்கால் அவை அச்சக் கனவென மறைந்துவிடும்.

* * *

விழிப்புற்றவன் அச்சத்தினின்றும் நீங்கியவனாவான்; அவன் புத்தராகி விட்டவன்; அவன் கொள்ளும் கவலைகளும், பேராசைகளும், அவன் படும் துயரங்களும் ஆகிய அனைத்தும் வீணை என்பதை அவன் அறிவான்.

* * *

தன்னயத்தை அறவே வென்றவன் ஆனந்தமாயிருப்பான்; சாந்தியை அடைந்தவன் ஆனந்தமாயிருப்பான்; மெய்ப்பொருள் கண்டவன் ஆனந்தமாயிருப்பான்.

* * *

மெய்ப்பொருள் மேன்மையுற்றது, இனிமை வாய்ந்தது; மெய்யே உன்னைத் தீமையினின்றும் விடுவிக்க வல்லதாம். உண்மையன்றி, உலகிலே உய்விப்பவன் வேறிலை.

* * *

உண்மையை அறிய உனக்கு இயலாதாயினும், அதன் இனிமையைக் கசப்பெனக் கருதுவையெனினும்; முதலில் அதனின்றும் விலகுவையெனினும், உண்மையில் நம்பிக்கை கொள்க.

* * *

உண்மை உள்ளவாறே மிகச் சிறந்தது. எவனும் அதனை மாற்றவல்லான் அல்லன்; எவனும் அதனைச் செப்பனிட வல்லனும் அல்லன். உண்மையில் நம்பிக்கை உறுக, அதற்குத் தக வாழ்க

* * *

பிழைகள் நெறியை விட்டு விலக்கும்; பொய்ம்மைகள் துயரத்தை ஈனும். அவை திறன்மிகும் மதுக்களைப் போன்று வெறியூட்டுவன; ஆனால் அவை விரைவில் தேய்ந்து மாயும்,

உன்பால் நோயையும் அருவருப்பையும் விட்டுச் செல்லும்.

* * *

தான் என்பது ஒரு சுர நோய்; அது கணத்தினில் மறையும் காட்சி. ஒரு கனவே: ஆனால் உண்மையோ நலந் தருவது, விழுமியது, யாண்டும் நிலைத்திருப்பது. உண்மையிலன்றி அமர வாழ்வு இல்லை. ஏனெனின் உண்மையொன்றே என்றும் தங்கும் தகைமையது.

* * *

தன்னந் தனியாக வாழும் மனிதன், உண்மைக்கு இயைய நிற்கும் உறுதி பூண்டிருப்பினும், வலிகுன்றித் தன் பண்டைய வழிகட்கே வழுவிவிட லாகும். ஆதலால் நீவிர் சேர்ந்து வாழு மின், ஒருவர்க்கொருவர் உதவிபுரிமின், ஒருவர் முயற்சியைப் பிறர் வலியுறுத்து மின்.

* * *

உடன் பிறந்தாரைப்போன்று இருமின்; அன்பிலும், புனிதத் தன்மையிலும், உண்மையை நாடும் ஊக்கத்திலும் ஒருவராய் இருமின்.

* * *

உலகின்கண் உள்ள எல்லாத் திசைகளிலும் உண்மையைப் பரப்புங்கள். கொள்கையை (உபதேசத்தை)ப் போதியுங்கள்; அதனால் இறுதியாக, வாழும் உயிர்கள் அனைத்தும் நேர்மையெனும் நாட்டின் குடிகள் ஆகட்டும்.

* * *

துயரத்தை ஒழிக்கும் பொருட்டே புனித வாழ்வை நடத்துமின்.

---

# அருள்

எவ்விதக் கைமாற்றையும்—தேவருலகில் மீண்டும் பிறப்பதையும்—யான் எதிர்பார்ப்பதில்லை என அவனுக்கு உரை: ஆனால் நெறிதவறிச் சென்றோரை மீட்பதற்கும், பிழையெனும் இரவில் வாழ்வார்க்கு ஒளியைச் சொரிதற்கும், இவ்வுலகினின்றும் எல்லா மன வருத்தத்தையும் எல்லாத் துயரத்தையும் துரத்துதற்கும் என, மனிதரின் நலத்தை யான் நாடுகிறேன்.

* * *

என் சுயநலத்திற்காக அன்று, யான் எல்லோர்க்கும் நலம் விழையப் பழகுதல்; ஆனால் உயிர்கள் இன்புறுதற்கு உதவும் என் ஆசையால் நலஞ் செயும் விருப்பம் உடையேன்.

* * *

நீ துயருறுங் காரணம் யாதாயினும், பிறர்க்கு இன்னா செய்யாதே.

*   *   *

கடமையின் நெறியைக் கடைப்பிடி; உன் உடன் பிறந்தாரிடம் நேசங் காட்டி, அவர்களைத் துயரினின்றும் விடுவி.

*   *   *

எவ்வுயிர்க்காயினும் இரக்கமிலானாய், உயிர்கட்கு ஊறும் தீங்கும் செய்வோன் எவனோ அவன் ஜாதிப்பிரஷ்டன் (ஜாதியினின்றும் விலக்கப்பட்டவன்) என அறிக.

*   *   *

அனைத்துயிர்மீதும் அன்பாயிருத்தலே உண்மை மதமாகும்; வாழும் உயிர்களிடத்தெல்லாம் அளவிலா அன்பு நெஞ்சத்துப் பூணுக.

*   *   *

உங்கள் நெஞ்சங்கள் குழம்பிவிடக் கூடாது, எந்தத் தீய மொழியும் உங்கள் வாயினின்றும் கிளம்பக் கூடாது; அன்பு நிறைந்த நெஞ்சொடும், மறைவான தீய நினைவு அற்றும், நன்னயஞ் செய்யும் விருப்புடன் இருங்கள்; கேடிழைப்போரையும், அன்பலர்ந்த எண்ணங்களாலும், எல்லாச் சினமும் பகையும் ஒழிந்து, வண்மையும் ஆழமும் எல்லையற்ற பான்மையும் வாய்ந்த எண்ணங்களாலும் சூழ்ந்துகொள்ள வேண்டும். என் சீடர்காள், நீங்கள் இவ்வண்ணம் வாழ்தல் வேண்டும்.

* * *

உண்மையான சமய வாழ்விற்குரிய சிறப்பான அறிகுறிகளாவன: நல்லெண்ணமும், அன்பும், மெய்ம்மையும், தூய்மையும், உணர்ச்சியின் மேன்மையும், நேசமும்.

* * *

எல்லா உயிர்களும் ஆனந்தத்தை அவாவுகின்றன; ஆதலால் உன் அருளை (தயையை) அனைவர் மீதும் செலுத்தி விரிவாக்கு.

* * *

பகைமை இவ்வுலகிலே ஒருபோதும் பகைமையால் ஒழிவதில்லை; அன்பினாலேதான் அது ஒழியும். இது பழைமையான நியதி.

* * *

பொறையிருந்தாற்றுதல் உயர்வற உயர்ந்த தவம். நிர்வாணம் பெருஞ் சிறப்புற்றது என்பர் புத்தர்கள், ஏனெனில் பிறர்க்கின்னு செய்வோன் முனிவனாகான். பிறரை நலிவோன் (துன்புறுத்துவோன்) தவனுமாகான் (தவசியாகான்).

* * *

பிறரைத் துயருறுத்துவதால் தனது இன்பப்பேற்றை விரும்புவோன், பகைமைச் சிக்கலில் அகப்படுதலின், பகைமையின்றும் விடுதலை பெருன்.

* * *

அவன் உலகத்துள்ள அனைத்துயிர் மீதும் அன்பை வளர்க்கட்டும்; எல்லையற்ற (நேச மனப்பான்மையுள்ள) நெஞ்சத்தை, மேலும், கீழும், குறுக்கேயும், தடையின்றி, வெறுப்பின்றி, பகைமையின்றிப் பேணிவருவாஞக.

* * *

தன்னுயிர்க்கு ஆபத்து நேர்வதாயினும், ஓரன்னை தன் மகனை, தன் ஒரே மகனைப் பாதுகாப்பதுபோல, உண்மையை உணர்ந்தவன் எல்லா உயிர்களிடத்தும் அன்பை அளவுபடுத்தாது வளர்த்து வருக.

* * *

உலக முழுவதின்மீதும், மேலும், கீழும், நாற்புறத்தும், சுருக்காதும், வேறுபாட்டு உணர்ச்சியோ பக்ஷபாதமோ கலவாதும் அன்பை அவன் வளர்த்து வருக.

* * *

அருளார்ந்த நெஞ்சினனை அனைவரும் விரும்புவார்: அவனது நட்பு ஆன்ற மதிப்பைப் பெறும்; இறப்பினும் அவனது நெஞ்சத்து அமைதி குடிகொள்ள ஆனந்தம் நிரம்பியிருக்கும்; யாது காரணமெனின், அவன் கழிவிரக்கத்தால் துயருருன்; பயனுகிய மலரும் பூவையும், அதனின்றும் பழுக்கும் கனியையும் அவன் பெறுகிறுன்.

* * *

அரிதே இதனை அறிதல்: நமது உணவை ஈதலால் பலம் மிகப் பெறு

கிறோம்; உடையைப் பிறர்க்கு அளிப்ப தால் அழகு மிகப்பெறுகிறோம்; தூய்மை மெய்ம்மைகட்கு உறைவிடங் களை நிறுவுவதால் பெருநிதியம் சார் கின்றோம்.

* * *

திறன் செறியும் வீரன் போர்க்குச் செல்லுதல் போன்றே, கொடுக்க வல்லனாகும் மனிதனும். அன்பும் அரு ளும் பெருக, வணக்கத்தொடு நல்கு வான் அவன், பகை வெருமை சினம் இவற்றைத் துரத்திவிடுவான்.

* * *

அருளார்ந்த நெஞ்சத்தான் முத்தி நெறி கண்டவன். அவன் ஒரு சிறு செடியை நட்டு, அவ்வாயிலாகப் பிற்

காலத்திற்கென நிழலையும் மலர்களை யும் கனியையும் தேடிவைக்கும் மனி தனைப் போன்றவனவான். கருணை யின் விளைவும் அவ்வாறே; வேண்டிய விடத்து உதவுவோனது இன்பமும் அவ்வண்ணமே: பெரும்பதமாகிய நிர் வாணமும் அங்ஙனமேயாம்.

* * *

நீ இழந்த மகனோடு உன்னைப் பிணிக்கும் அன்புத் தொடக்கால் மன் னுயிர் அனைவரையும் சம அன்போடு தழுவிக்கொள்க; அப்போது அவனுக் குப் பதிலாகச் சித்தார்த்தனினும் பெரி யான் ஒருவன் உன்னைவந்தடைவான்; உண்மைக் குரவரும், அறப் பிரசார கரும் ஆன புத்தரை நீ பெறுவாய்;

நிர்வாணசாந்தி உள நெஞ்சுட் குடி புகும்.

* * *

தொடர்ந்த இன்செயல்களால் மட்டுமே இறவா நிலையை எய்தல் கைகூடும்; அருளும் அன்பும் பூரணத்தை எய்துவிக்கும்.

* * *

அன்புநிறை நெஞ்சமே அனைத்தினும் இன்றியமையாதது.

# தாரணம், தியானம், ஸித்தி

கூறுவான் சீடன்: "நாதரே, என் மனத்தைத் தூய நாடாகிய துறக்கத்திற்குட் புகவிடுமாறு யான் கட்டாயம் ஈடுபடவேண்டிய தியானவகைகளை எனக்குப் போதித்தருள்வீராக."

புத்தர் பகர்ந்த மறுமொழியாவது: ஐந்து தியானங்கள் உள்ளன:

1. முதல் தியானம் அன்பைப் பற்றிய தியானம்; இதில் உன் பகைவர்களது நலம் உள்பட, எல்லா உயிர்களின் நலத்தையும் அவாவுமாறு உனது நெஞ்சத்தைத் தக்க வண்ணம் அமைத்தல் வேண்டும்.

  

2. இரண்டாவது தியானம் தயையைப் பற்றிய தியானம்: இதில் உயிர்கள் அனைத்தும் துயருறுவதாக நினைத்து, மனத்திரையில் உன் கற்பனைக் கோலால் அவர்கள்படும் அவலக் கவலைகளைத் தெளிய எழுதி, அவர்கள் மீது ஆழ்ந்த கருணையை உன் நெஞ்சத்துக் கிளப்ப வேண்டும்.

* * *

3. மூன்றாவது தியானமாவது ஆனந்தத் தியானம்; இதில், பிறர் கொழிப்பதை நினைத்து, அவர்கள் எய்தும் மகிழ்ச்சியால் நீயும் மகிழ்வுறுதல் வேண்டும்.

4. நாலாவது தியானமாவது மலத்தைப் பற்றிய தியானம்; இதில் பத

னழிவால் நேரும் கேடுகளையும், பாவம் பிணிகள் என்பவற்றின் விளைவுகளையும் சிந்தனை செய்தல் வேண்டும். ஒரு கணம் தோன்றும் இன்பம் பன்முறையும் எத்துணை அற்பமாவது! அதனாற் சாரும் பயன்கள் எத்துணை ஆபத்தானவை!

* * *

5. ஐந்தாவது தியானம் அமைதியைப் பற்றிய தியானம்; இதில் அன்பும் பகைமையும், கொடுமைக்காளாதலும் நலிதலும், செல்வமும் வறுமையும் ஆகியவற்றைக் கடந்து அப்பாற் கிளம்பி, உனது சொந்த ஊழை ஓரமற்ற அமைதியோடும், முழுச் சாந்தியோடும் கருதவேண்டும்.

* * *

வினு: மனிதன் அபிக்ஞையை (அதீத மேதையை) அடைதற்குச் சாதனமாகும் தியானங்கள் யாவை?

விடை: நான்கு தியானங்கள் (பேரின்பக் காட்சிகள்) உள.

1. முதல் தியானமாவது தனிமை; இதில் ஐம்புல இச்சையினின்றும் உன் மனதை விலக்கி வைக்கவேண்டும்.

* * * *

2. இரண்டாவது தியானம் ஆனந்தமும் மகிழ்ச்சியும் தரும்பும் மனச் சாந்தியாம்.

* * * *

3. மூன்ருவது தியானம் ஆன்மீய (ஞான)ப் பொருள்களில் மகிழ்வு கூர்தலாம்.

* * * *

4. நான்காவது தியானம் நிறைவுற்ற தூய்மையும் சாந்தியும் இணைந்த ஒரு நிலை; இதில் மனம் எல்லா மகிழ்ச்சியையும் சோகத்தையும் தாண்டி நிற்கும்.

அடங்கிய உளத்தினனாயிருந்து, உன் மனத்தை இழிவுபடுத்தமட்டும் உதவும் தவறான பழக்கங்களைக் கைவிடுக.

*   *   *   *

வினா: ததாகதரே, எனது (குரு) நாதரே, 'ரித்திபத'த்தை (சடத்தினை வெல்லும் சித்த சக்தியைப் பெறும் வழியை)ப் போதித்தருளும்.

விடை: பேறெய்திய பெரியார் புத்தர் கூறுவார்: ரித்தியை (சித்த

வலிமையால் சடத்தினை வெல்லும் வகையை) அடைய நான்கு சாதனங்கள் உள்ளன.

*          *          *          *

1. தீய இயல்புகள் கிளம்பாத வண்ணம் தடுத்துக் கொள்க.

*          *          *          *

2. கிளம்பியுள்ள தீய இயல்புகளை ஒதுக்கி வைத்துவிடு.

*          *          *          *

3. இதுகாறும் எய்தாத நலனை உண்டாக்குக.

*          *          *          *

4. சிரத்தையொடு தேடுக. தேட்டத்தில் இடைவிடாது முயல்க. இறுதியில் மெய்ப்பொருளைக் காண்பாய்.

---

## அறியப்படாத குரவர்

பேரின்பப் பேறெய்திய பெரியவராய புத்தர் (தம் முதன்மையான சீடராகிய) ஆனந்தரிடம் உரைத்தருளியதாவது:

குழாங்கள், ஆனந்த, உயர் குடியினர் குழாம், அந்தணர் குழாம், இல்லறத்தோர் குழாம், துறவோர் குழாம், ஏனையோர் குழாம் எனப் பல்வகையின. யான் ஒரு குழாத்துட் புகும் போதெலாம், யான் அமருமுன், எனது குழுவினரது வண்ணம்போன்ற ஒரு வண்ணத்தனாயும், அன்னாரது குரலனைய ஒரு குரலினனாயும் எப்போதும் ஆவேன். பின்னர் ஞான போத

ளையை அவர்க்கு அளித்து, ஊக்கு வித்து, மகிழ்ச்சியும் ஊட்டுவேன்.

*　　*　　*

எனது அறம் கடலைப்போன்று அதே வியக்கத்தக்க எண்குணங்களை உடையது.

*　　*　　*　　*

கடலும் எனது அறமும் ஆகிய இரண்டும் ஆழம் மிகுந்து வருகின்றன

*　　*　　*　　*

மாற்றங்கள் அனைத்திற்கும் உள்ளா கும்போதும், இரண்டும் தமது தனித் தன்மைகளைப் பாதுகாத்து வருகின் றன.

*　　*　　*　　*

இரண்டும் உலர்ந்த நிலத்திலே இறந்த உடல்களை எடுத்தெறிகின்றன.

* * * *

பேராறுகள் கடலிற் புகும்போது தம் பெயர்களை இழந்து, அது முதல் பெருங் கடலாகக் கருதப்படுவது போன்றே, எல்லா வருணத்தாரும் தமது குடிவழியைத் துறந்து சங்கத்திற் புகுந்தமையால், உடன் பிறந்தோராகி சாக்கிய முனியின் குமரராகக் கருதப்படுகின்றனர்.

* * * *

கடலே ஆறுகள் அனைத்திற்கும், மேகங்களினின்று விழும் மழை நீருக்கும் முடிவிடமாகும்; ஆயினும் அது ஒருகாலும் ததும்பி வழிவதுமில்லை;

ஒருகாலும் வறண்டுபோவதுமில்லை; அதுபோல், கோடிக்கணக்கான மக்களால் தருமம் தழுவப்படினும் அது வளர்வதுமில்லை, தேய்வதுமில்லை.

* * * *

பெருங்கடலுக்கு உப்புச் சுவையாகிய ஒரு சுவையே இருப்பது போன்று, எனது அறத்திற்கும் முத்தி மணமாய ஒரு மணமே உளதாகும்.

* * * *

கடலும் அறமும் இரண்டும் மணிகளாலும் முத்துக்களாலும் அணிகளாலும் நிரம்பியுள்ளன; இரண்டும் பெருவலிமையுற்ற உயிர்கட்கு உறைவிடம் தருகின்றன.

* * * *

• எனது அறம் தூயது; அது உயர்ந்தோர்—தாழ்ந்தோர், செல்வர்—வறிஞர் என்று வேறுபடுத்தலை அறியாதது.

* * * *

வேறுபாடு யாதுமின்றி அனைத்தையும் தூய்மையாக்கும் நீரைப்போன்றது எனது அறம்.

* * * *

மண்ணுலகிற்கும் விண்ணுலகிற்கும் இடையேயுள்ள, பெரிதும் சிறிதும் ஆய அனைத்துப் பொருள்களையும் எரிக்கும் அனல் அனையது எனது அறம்.

* * * *

வானுலகம் போன்றது எனது அறம்; எங்ஙனமெனில், அதன்கண்

ஆண்களையும் பெண்களையும், சிறுவர்களையும் சிறுமிகளையும், வலியாரையும் மெலியாரையும் வரவேற்கப் பரந்த இடம் உளது.

*　　*　　*　　*

ஆனால் யான் பேசிய காலை, அவர்கள் என்னை அறிய மாட்டாதே, "இவ்வண்ணம் பேசுவார் யாரோ மனிதரோ, இறைவரோ!" என்பர், பின்னர், ஞானமொழி பேசி அவர்கட்குப் போதித்து, ஊக்குவித்து, மகிழ்வித்ததும் யான் மறைந்துவிடுவேன். ஆனால் யான் மறைந்த பின்னும் அவர்கள் என்னை அறியாதே போயினர்.

*　　*　　*　　*

எள்ளாமை, இன்று செய்யாமை,

'அடிப்படை போதனைகளில் அடக்க முடைமை, உணவில் மிதம், தனியான உறைவிடம், உயர்வு உள்ளலில் ஈடு பாடு—புத்தர்களின் புத்திமதி இதுவே.

* * * *

முழுஞான ஒளிபெற்ற புத்தரின் சீடன் ஆசையை மாய்த்தலில் ஆனந் தம் அடைவான்.

* * * *

ததாகதரின் அங்கியாவது, விழுமிய மன்னிப்பும் பொறையுமே. ததாக தரின் உறையுளாவது, அறநெறியும், அனைத்துயிர்மீதும் அன்பு செயலும். ததாகதரின் பிரசங்க மேடையாவது, நல்லறத்தின் பண்புக்குரிய பொருளை யும், அதனைத் தனியாகப் பயன்படுத் தும் முறையையும் உணர்தலே.

———

# மனம்

எல்லா முயற்சிகட்கும் முன்னோடியாயிருப்பது மனம்; உணரும் திறன்கள் அனைத்திலும் மிகமிக உயர்ந்ததும் மனம். சொந்தக் கருத்துக்கள் அனைத்தும் உதிக்கும் இடமும் மனமே.

* * * *

காட்சிகள் அனைத்திற்கும் மனமே தூதன், வியாவகாரிகப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா மூலப் பொருள்களினும் மிக நுண்ணியது மனமே. புறத்தே உருவைக்காணும் உணர்வெல்லாம் மனத்திலே உற்படுத்தியாவன. தூய உள்ளத்தொடும் பேசுபவனோ செயல் புரிபவனோ—அவனொடும் அவனது சொந்த நிழலைப் போன்றே ஆனந்தம் உறையும்.

* * * *

"பிறர் என்னைப் பகைக்கின்றனர், என்மீது அவநம்பிக்கை கொள்கின்றனர். என்னைத் தவருகக் கருதுகின்றனர், என்னை வஞ்சிக்கின்றனர்"—இத்தகைய நினைவுகட்குத் தன் உள்ளத்திலே இடங்கொடுப்பவன் தன்மீது அழிவைச் சுமத்தும் ஏதுக்களினின்றும் ஒருபோதும் நீங்கம் அடையான்.

* * * *

தன்னை வென்றவன், தன்னிலும் ஆயிரமடங்கு பெருவலியுற்ற ஓராயிரம் பகைவர்களை வென்றும் தனது உணர்ச்சிப் பகுதிக்கு அடிமையாகி இருப்பவனைக் காட்டிலும், மெய்யாகவே வெற்றிமிக்க வீரனவான்.

* * * *

புற அழகையும் சிறப்பையும் நாடித் திரியும் உள்ளத்தன்; தன் ஐம்புலன்களையும் அடக்கியாள மாட்டாதவன்;

தூய்மையற்ற உணவை அருந்துபவன், மடியுள்ளனாய், அறத்தின் தீரம் அற்றவன்;—ஆகிய இன்னாரை அறியாமையும் துயரமும், சத்தற்ற மரத்தைப் பெருங்காற்று முறிப்பதுபோன்று, வென்று வீழ்த்தும்.

* * * *

குறைவறக் கூரை வேய்ந்து நன்கு மூடப்பெறாத இல்லத்திற்குள்ளே மழைத்துளிகள் ஒழுகுவதுபோன்று, அகமுகமான தியானத்தில் அருவருப்புற்ற மனத்துள்ளே பற்றும் பகையும் மருளும் புகும்.

* * * *

காமத்தால் நனையாத மனத்தன், பகையாற் பாதிக்கப்படாதவன், நலம் தீது இரண்டையும் ஒதுக்கியவன்— இத்தகைய விழிப்புடையானுக்கு அச்சம் இல்லை.

* * * *

•வெறுப்பும் தீதும் மிகச் செறியும் ஒரு பகைவன் ஒருவற்குச் செய்யும் தீங்கினும் பார்க்க அளவற்ற பெருங் கேட்டை, அறியாமை நெறியைப் பின் பற்றும் ஒரு நெஞ்சு இழைக்கும்.

* * * *

காத்தற்கு அரியதும், அடக்குதற்கு அரியதுமான, சலிப்புற்ற நிலையற்ற மனத்தைப் புத்திமான் நேராக்கு கிறுன்; வில்லாளி அம்பினை நேராக்கு வதுபோல.

* * * *

மனம் தடுத்தற்கரியது, மிக மிக நுண்மையது, விரிவுடையது, இச்சைப் படியெல்லாம் திரிவது—அத்தகைய மனதை அடக்குதல் நன்று; அடங் கிய மனம் ஆனந்தம் பெற வாய்ப்பு அளிக்கும்.

* * * *

எவனது மனம் உறுதியற்றதோ, உயர்ந்த அறத்தினை அறியாததோ, எவனது நம்பிக்கை அசைவுறுமோ—அத்தகைய மனிதனின் ஞானம் ஒரு நாளும் நிறைவெய்தாது.

* * * *

வெகு தொலை செல்வதும், தனியே திரிவதும், உடலற்றதும், (உணர்வுக்கு நிலையமாகிய) குகையில் இருப்பதும் இம்மனம். அதை அடக்குவோர் மாரனின் (மாயையின்) கட்டுகளினின்றும் விடுபடுவர்.

* * * *

அன்னையோ, தந்தையோ வேறெந்த உறவினரோ இயற்ற இயலாததை, நன்கு செலுத்தப்பட்ட மனம் இயற்றுகின்றது, அவ்வாயிலாக ஒருவனை உயர்த்துகின்றது.

• ஒரு பகைவன் இன்னொரு பகைவனுக்கும், வெறுப்புடையோன் இன்னொரு வெறுப்புடையோனுக்கும், என்னென்ன தீங்கு இழைக்கலாமோ, அதனினும் பெருந்தீங்கை நன்கு செலுத்தப்படாத மனம் ஒருவற்கு இழைக்க இயலும்.

* * * *

பழகாமையே தியானத்திற்கு மாசு, துப்புரவின்மையே உடலிற்கு மாசு; சோம்பலே புலன்கட்கு மாசு; சஞ்சலமே மனதிற்கு மாசு.

* * * *

எவனது மனது ஆசையின் நீங்கிய தூய்மையுற்றதோ, அத்தகைய விழிப்புள்ள மனிதனுக்கு அச்சம் யாதும் இல்லை.

* * * *

தீமை அனைத்தையும் விலக்குதலும்; நற்செயல்களைப் புரிதலும், ஒருவன் தன் மனத்தைத் தூயதாக்கலும்—இதுவே புத்தர்களின் கொள்கையாம்.

* * * *

மனதை உயர்த்துக, உறுதியான நோக்கத்தோடு மனமார்ந்த நம்பிக்கையை நாடுக; அன்போடு ஒழுகுதற்குரிய விதிகளை மீறாதே; உனது ஆனந்தம் புறத்துள்ள பொருள்களைச் சார்ந்ததாகாது, உனது சொந்த மனத்தையே பொறுத்ததாகட்டும். இவ்வாறு நீ சேய்மைக் காலங்களிலும் ஒளிரும் நற்புகழைத் தொகுத்து வைப்பாய்; அதோடு ததாகதரின் அருளையும் பெறுவாய்.

# அகங்காரம்

தனது அகங்காரத்தின் இயல்பை உணர்ந்து, தன் புலன்கள் வேலை செய்யும் வகையையும் அறிபவன், 'நான்' என்பதற்கு இருக்க இடமில்லாமையைக் காண்பான்; அதனால் முடிவுற்ற சாந்தியை எய்துவான். உலகம் 'நான்' எனும் நினைவைப்பற்றி நிற்கின்றது; அதனின்றும் கிளம்புவது பொய்யறிவு.

*  *  *  *

'நான்' என்பது இறந்த பின் நிலைப்பது என்பர் சிலர், மாய்வது என்பர் வேறு சிலர். இருவரும் பிழைபடுபவரே, அவர்களது பிழை மிகப்பெருந் தீங்கினை விளைப்பதாகும்.

*  *  *  *

பிழையாவது எவ்வாறெனின்: 'நான்' அழியும் தகையது எனின்,

அவர்கள் பெற முயலும் பயன்களும் அழிவனவாம்; யாதோ ஒரு காலத்துப் பிற்றைநாள் என்பது இல்லாது போகும். பாவஞ்செறிந்த தன்னயத்தினின்றும் இவ்வாறு உய்தல் சிறப்பற்றது.

* * * *

இதற்கு மாறுகச் சிலர், 'யான்' என்பது அழியாது என்பரேல், அப்போது, பிறப்பிறப்புகள் எல்லாவற்றிற்கும் நடுவே பிறப்பற்றதும் இறப்பற்றதும் ஆன பொருள் ஒன்றே உள்ளது என்பதாகும். அவர்களது 'நான்' அத்தகையதாயின், அது பூரணமுடையதாகும், கருமங்களாற் பூரணமடையப் பெறுதல் இயலாது. நிலையான அழிவற்ற 'நான்' ஒரு நாளும் மாற்றமடையாததாம். 'நான்' என்பது பிரபுவாயும் எஜமானனுயும் இருக்கும்,

பூரணத்தைப் பூரணமாக்குவது அப்போது பயனற்றதாகும்; அறநோக்கங்களும் முத்தியடைதலும் அவசிய மற்றனவாம்.

* * * *

ஆனால் இப்போதோ இன்ப துன்பங்களின் குறிகளை நாம் காண்கிறோம். இம்மியேனும் மாறாத்தன்மை எங்குள்ளது! நமது கருமங்களை இயற்றுவது 'நான்' என்பதன்று எனின், அப்போது 'நான்' இல்லை என்பதாம்; செயலுக்குப்பின் செய்வோனும், அறிவுக்குப்பின் அறிவோனும், வாழ்வுக்குப்பின் வாழ்வோனும் இல்லை என்பதாகும்.

* * * *

இப்போது கவனி, கூர்ந்து கேள், புலன்கள் பொருளைச் சந்திக்கின்றன, இவ்விரண்டின் சேர்க்கையினின்றும்

உணர்ச்சி பிறக்கின்றது. அதனின்றும் நினைவு விளைகின்றது. ஒரு குவிவில்லை வழியாகச் செல்லும் சூரியனது சக்தி தீயைத் தோன்றச் செய்வதுபோல், புலனும் பொருளும் கூடுவதனாற் பிறக்கும் அறிவின் வாயிலாக, உன்னால் 'நான்' என்று அழைக்கப்படும் அப்பிரபு பிறக்கிறான். குருத்து விதையினின்றும் உதிக்கின்றது; விதை குருத்தாகாது; இரண்டும் ஒரே பொருளல்ல, எனினும் வேறுபட்டன வாகா! உயிருள்ள வாழ்வின் பிறப்பு இத்தகையதே.

* * * *

தான் என்பதற்கு அடிமையாகி, தனக்கெனச் செய்யும் பணியில் காலை முதல் இரவுவரை உழைப்போராய், பிறப்பு முதுமை பிணி சாவு என்பவற்றை ஓயாது அஞ்சி வாழ்வோரே, நீங்கள், உங்களது கொடுங்கோன்

மன்னன் இருப்பதில்லை என்ற நற்
செய்தியைப் பெற்றுக்கொள்ளுங்கள்!

* * * *

'நான்' என்பது ஒரு பிழை, ஒரு
மித்தையறிவு, ஒரு கனவு. கண்களைத்
திறவுங்கள், விழியுங்கள். உள்ளதை
உள்ளவாறு காணுங்கள், நீங்கள் ஆறு
தல் அடைவீர்கள்.

* * * *

விழித்திருப்பவன் அதன்பின் பயங்
கரமான கனவுகட்கு அஞ்சமாட்டான்.
பாம்பெனத் தோற்றம் அளித்த
பழுதையின் இயல்பை உணர்ந்தவன்
நடுக்கமெய்தான்.

* * * *

'நான்' என்பது இல்லையென்
பதைக் கண்டறிந்தவன் அகங்காரத்

தால் விளையும் காமங்கள் விருப்பங்கள் அனைத்தையும் ஒழித்து விடுவான்.

* * * *

பண்டைய பிறவிகளினின்றும் வந்துள்ளனவான, பொருள்களின் மீதுள்ள பற்றும், பேராசையும், விஷய இச்சையுமே உலகிற் காணும் துயருக்கும் வீண் பெருமைக்கும் காரணங்களாம்.

* * * *

இறுகப்பற்றும் உனது தன்னலத்தின் இயல்பை விட்டுவிடு; பூரண அமைதியையும், நன்மையையும், ஞானத்தையும் தரும் பாவமற்ற சாந்தமன நிலையைப் பெறுவாய்.

* * * *

தனது அருமையைத் தான் உணரின், தன்னைத்தான் நன்கு பாதுகாத்

துக்கொள்ளவேண்டும். ஜாமங்கள் மூன்றினுள் ஒன்றினிலே ஞானி விழித் திருக்கவேண்டும்.

* * * *

தனக்குப் புகலாத் தானே ஆவான்;
பிறனெவன் புகலெனப் பெறுதற்
கேற்றவன் !
தன்னை முற்றும் தானே அடக்கு
வோன்
பெறலரும் புகலைப் பெறுபவ
னாவான்.

* * * *

தன்னாலேதான் தீமை செயப்படும்; அது தானாகப் பிறப்பது, தானே விளைப்பது. வைரம் ஓர் உறுதியான மணியை அரைப்பதுபோல, தீமை உலகினை அரைக்கின்றது.

• • •

தானே தனக்குக் கேடிழைப் போனே,
தானே தன்னை அசுத்த மாக்குவான்.
தானே தனது தீமையை ஒழிப்போன்,
தானே தன்னைத் தூய்மை யாக்கு
வோன்.
தன்னையே பொறுத்தன தூய்மையும்
மாசும்,
பிறனைத் தூயோ னாக்குவோன்
எவனோ ?

# தீமை, நன்மை, துயரம்

புத்தர் வினவினுர் : நண்பீர் ! தீதெனப்படுவது யாது ?

நண்பீர் ! கொல்லல் தீது ; திருடல் தீது ; காம விழைவுக்கு இணங்கல் தீது ; பொய்பேசல் தீது ; பழித்தல் தீது ; திட்டுதல் தீது ; வம்புரைத்தல் தீது ; பொருமை தீது ; பகை தீது ; பொய்க்கொள்கையைப் பற்றுதல் தீது ; நண்பீர், இவையெலாம் தீதே.

* * *

நண்பீர் ! தீமைக்கு வேர் யாது ?

ஆசையே தீமைக்கு வேர் ; பகையே தீமைக்கு வேர் ; பொய்க் காட்சியே தீமைக்கு வேர் ; இப்பொருள்களே தீமைக்கு வேர்.

* * * *

தீச்செயல் எனின் அதைச் செய்யாமை
நன்று,
பிறரை வருத்தலாற் பின்னாள்
அச்செயல்.
நற்செய லாயின் நன்றே அதைச்
செயல்,
இயற்றிய பின் அதற் கிரங்குதல்
இல்லையால்.

* * *

தீவினை அற்பமா நினையேல்; 'அது என் அருகிலே வாராது' என உரையேல். துளி பல வீழ்தலால் சாடியும் நிரம்பும். அதுபோல், சிறிது சிறிதாகச் சேர்க்கும் பேதையும் தன்னைத் தீமையால் நிரப்புவன்.

* * *

சிறு காவற்படையோடும் பெருநிதியத்தோடும் செல்லும் ஒரு வணிகன்

ஆபத்து நேரும் வழியினின்றும் விலகுதல்போலும், வாழும் விருப்பமுடையோன் நஞ்சினை விலக்குதல்போலும், தீமையினின்றும் ஒருவன் விலகுதல் வேண்டும்.

* * *

செய்த தீச்செயலின் விளைவுகள் சேராவண்ணம் தப்பி வாழ்தற்கு இப்பாரிலே ஓரிடம் விண்ணிலோ நடுக்கடலிலோ ஒரு மலைக்குகையிலோ காணப்படுவதில்லை.

* * *

வாழும் உயிர்களின் செயல்கள் யாவும் பத்துப் பொருள்களால் தீயன ஆவன; அப்பத்துப் பொருள்களை நீக்கலால் நல்லன ஆவன. உடலைப்பற்றி வரும் தீமைகள் மூன்றும், வாக்கைப் பற்றிவரும் தீமைகள் நான்கும், உள்

ளத்தைப்பற்றிவரும் தீமைகள் மூன்றும் ஆகப் பத்து அவை.

* * *

உடம்பில் தோன்றுவன; கொலையே களவே காமத்தீ விழைவு எனபன; சொல்லில் தோன்றுவன: பொய்யே குறளை (கோட்சொல்லல்) கடுஞ்சொல் பயனில்சொல் என்பன; உள்ளத்தில் தோன்றுவன: வெஃகல் (பேராசை) வெகுளல் (பகை) பொல்லாக்காட்சி (பிழையுற்ற காட்சி) என்பன.

* * *

இப்பத்துக் குற்றங்களையும் நீக்கும் வகையையும் உனக்குப் போதிக்கிறேன்:

1. கொல்லாதே; உயிரினை மதித்து ஒழுகுக.

2. களவு செய்யாதே, கொள்ளை அடியாதே, தன் உழைப்பின் பயன்கட்கு உரியவனுமாறு எவனுக்கும் உதவிபுரிக.

3. அசுத்தத்தை விட்டொழித்து, தூய வாழ்வைப் பற்றுக.

4. பொய் பேசாதே, உண்மையைக் கூறுக. அறிவோடும், அச்சமின்றியும், அன்புடைய நெஞ்சோடும் வாய்மையை உரைத்திடு.

5. பொய்வதந்திகளைப் புதிதாகப் புனையாதே; அவற்றைத் திரும்பக் கூருதே. குறை கூருதே; பிறருடைய நல்லியல்புகளை நாடியறிக; அவர்களைப் பகைவர் பழிக்கின், நீ முழுமனதோடும் அவர்கட்காகப் பரிந்து பேசும் வண்ணம் நல்லன நாடுக.

6. சூள் உரையேயல் (ஆணையிடாதே); மரியாதையும் மதிப்பும் தோன்றப் பேசுக.

7. வம்புபேசிப் பொழுதைப் பாழ்படுத்தாதே; கருதிய ஒன்றையே கூறுக; ஆகாதாயின், வாய்திறவாதே.

8. பேராசை கொள்ளாதே, பொறாமையை ஒழி. பிறர் நலங்கண்டு பெருமகிழ்வெய்துக.

9. தீய நினைவொழிந்து நெஞ்சைத் தூயதாக்குக. நின் விரோதியர் மீதேனும் பகைமை கொள்ளேல். அனைத்துயிர்களையும் அன்பால் தழுவுக.

10. அறியாமையினின்றும் உன் உள்ளத்தை விடுவித்துக் கொள்க. ஐயத்திற்கோ திரிபுக்கோ ஆளாகாத வண்ணம், சிறப்பாக உனக்கு வேண்

டிய் ஒன்றிலே, உண்மையை அறிய ஆவலாயிரு.

* * * *

பாவஞ் செய்யினும், மீண்டும் அதனை ஒருவன் செய்யானாக; பாவத்திலே அவன் மகிழ்வுறாதிருப்பானாக; துன்பமே தீமையின் விளைவு.

* * *

ஒரு மனிதன் சினத்தை அன்பால் வெல்லட்டும், தீமையை நன்மையால் வெல்லட்டும், உலோப குணத்தை உதாரத்தால் வெல்லட்டும், பொய்யனை மெய்ம்மையால் வெல்லட்டும்.

* * *

தீய நினைவொடு ஒரு மனிதன் பேசினும், செய்யினும், துன்பம் அவனைத் தொடரும்; வண்டியை இழுக்கும் எரு

தின் அடியைச் சக்கரம் தொடர்வது போல.

* * *

தீயது புரியாதிருக்குமாறு, நமது நினைவுகளைச் சோதிப்போமாக; விதைத்தவாறே அறுப்புளது ஆதலின்.

* * *

பாவம் புரிவோர்க்குப் பாவம் தேனென இனியதாய்த் தோன்றுகிறது. தனது அறிவின்மையை உணரும் மூடன் அத்துணையேனும் புத்திமான் ஆவான். ஆனால் தன்னைப் புத்திமானாகக் கருதும் மூடனே உண்மை மூடன்.

* * *

வினா: துயர நீக்கத்தின் கண் உய்க்கும் நெறி யாது?

விடை: தூய எட்டு அங்க நெறியே துயர நீக்கத்தின்கண் உய்ப்பதாகும்.

• • •

வினு: நல்லது யாது?

விடை: கள்ளாமை நன்று; காம விழைவின்மை நன்று; பொய்யாமை நன்று; புறங்கூறாமை (கோள் சொல்லாமை) நன்று; பழி தூற்றாமை நன்று; அன்பின்மையை அடக்குதல் நன்று; வம்பை ஒழித்தல் நன்று; பொறாமையனைத்தையும் போக்கல் நன்று; பகைமையைத் துரத்துதல் நன்று; உண்மைக்கு அடங்கி ஒழுகுதல் நன்று—இவையனைத்தும் நல்லனவாகும்.

• • •

வினு: நம்பிர் நன்மைக்கு மூலம் யாது?

விடை : ஆசையினின்றும் விடுபடுதலே நன்மைக்கு மூலம் ; பகையினின்றும் விடுபடுதல், மித்தையினின்றும் விடுபடுதல்—இவையே, நண்பீர், நன்மைக்கு மூலம்.

* * *

வினு : உடன் பிறந்தீர், துக்கம் யாது ?

விடை : பிறப்பு துக்கம் ; முதுமை துக்கம் : பிணி துக்கம் ; மரணம் துக்கம் ; சோகமும் துயரும் துக்கம் ; கடுந்துன்பமும் கையறு நிலையும் (செயலற்ற நிலையும்) துக்கம் ; வெறுப்பனவோடு சேர்க்கை துக்கம் ; விரும்புவதை இழத்தலும், அவாவினதை அடையப் பெருமையும் துக்கம்—இவையனைத்தும், சோதரரே, துக்கமாம்.

* * *

வினா: துக்கத்திற்கு உற்பத்தி யாது?

விடை: காமம், கோபதாபம், எங்கணும் சுகத்தை நாடத் துடிக்கும் வாழ்வாசை—இவை ஓயாப் பிறவியில் நம்மைப் புகுத்தும். விஷய இச்சை, ஆசை, தன்னயம்—இவையே, சோதரரே, துக்கத்திற்கு உற்பத்தியாம்.

* * *

வினா: துக்கத்தைத் துடைத்தற்கு உதவும் நெறி யாது?

விடை: தூய எட்டு-அங்க நெறியே துக்கத்தைத் துடைப்பதற்கு உதவுவது. நண்பீர், மேன்மையுற்ற இளைஞன் ஒருவன் இவ்வாறு துக்கத்தையும், துக்க காரணத்தையும், துக்க நிவாரண நெறியையும் உணர்ந்து,

காமத்தை வேரொடுங் களைந்து, சினத்தை அடக்கி, 'யான் உளேன்' எனும் வீண் அகந்தையை ஒழித்து, அறியாமையை விடுத்து, ஞான விளக்கம் எய்தும் அளவிற்கே அவன் இவ் வாழ்விலே துயரமனைத்திற்கும் முடிவினைக் காண்பான்.

---

## பிக்ஷுக்கள் (துறவிகள்)

புண்ணியம் பாவம் இரண்டையும் இங்கே விட்டவன், தூய்மையுடையோன். இவ்வுலகிலே அறிவொடு வாழ்வோன்—அவனே உண்மையில் துறவியெனப்படுவோன்.

• • •

அடக்கமிலாதான், பொய் பேசுவோன், மழித்த தலையால் முனிவனாகான். விருப்பும் உலோபமும் நிறைந்தோன் முனிவனாவது யாங்ஙனம்?

• • •

அற்பமும் பெரிதும் ஆய தீதினை முழுதும் அடக்குவோன்—முனிவன்

எனும் பெயரைப் பெறுவான், தீமை யனைத்தையும் வென்றவனாதலின்.

* * *

மந்தமும் அறியாமையும் உடை யோன் மோனத்தாலே இருடியா கான். ஆனால் தராசைப்பற்றியிருப் பவன்போல் சிறந்ததைத் தழுவித் தீயதை ஒதுக்கும் புத்திமானே உண் மையாகவே இருடியாவான்.

* * *

பிறரிடமிருந்து பிச்சையேற்பதனால் மட்டும் ஒருவன் பிக்ஷு (துறவி) ஆக மாட்டான். தீய நாற்றம் வீசும் செயல் களைப் பின்பற்றுவதால் ஒருவன் மெய் யாகவே பிக்ஷுவாகான்.

* * *

துறவீ, அவா அவியப் பெறாத அள

வும், உன்னிடம் நம்பிக்கை வையாதே. பாவமான அவா அறுதலே உயர்வற உயர்ந்த ஞானமாம்.

* * *

ஆதலால், துறவீ, உனது ஒளியை விளங்கச் செய்க ; அதன் பயனாக, நீ உலகினைத் துறந்து, உன் வாழ்வு முழுதையும் ஞானத்திலும் ஞானப் பயிற்சியிலும் ஈடுபடுத்தியபின், மரியாதைக்குரிய விதிகளைப் பின்பற்றி ஒழுகுவாயாக, உனது குருமார்க்கும் மூத்தோர்க்கும் மரியாதையாயும் பிரியமாயும் அன்போடு உபசரிப்போனாயும் இருப்பாயாக.

* * *

ஒரு மாதினை மாதாக எண்ணி நோக்கவோ, அவளை மாதாக எண்ணித் தொடவோ செய்யும் முனிவன் தனது விரதத்தை முறித்தவனாவான் ;

அதன் பின்னர் சாக்கிய முனியின் (புத்தரின்) சீடனுகான்.

* * *

துறவீ, எத்துணை சொல்லியும், ஒரு மாதோடு உரையாடும் கட்டாயம் நேரு மாயின், தூய நெஞ்சொடும் அங்ஙனம் செய்க; "முனிவனுன யான், மண்ணில் வளர்ந்தும் மண்ணுல் அழுக்குருத தாமரையின் மறுவற்ற இலை போல, இப்பாவமார்ந்த உலகில் வாழ்வேன்" என்று உனக்குள் நினைந்து கொள்க.

* * *

மாது முதியவளாயின், அவளை நின் தாயெனக் கருதுக; இளையவளாயின் நினது தங்கையெனக் கருதுக; மிகச் சிறியளாயின், நினது சேயெனக் கருதுக.

* * *

ஆடவரிடத்துக் காமத்தின் வலிமை பெரிதே; அது அஞ்சத்தகுந்தது ஆத லின் சிரத்தையோடு விடாது முயலும் விரதத்தையும் ஞானத்தின் கூரிய அம்பு நுனிகளையும் கைக்கொள்க.

* * *

நல்ல வினையெனும் கவசத்தால், துறவீ, நின் சென்னியை மூடிக் கொள்க; அவாக்கள் ஐந்திரேனடும், மாறாத உறுதியொடு எதிர்த்துப் போராடுக.

* * *

பெண்ணின் அழகால் ஒருவனது நெஞ்சு கலக்கமடையும் போதும், அறிவு மயங்கும்போதும், காமம் அவ னது உள்ளத்தை மேகம்போற் கவி கின்றது.

* * * *

காம நினைவுகளை உன்னுள்ளே ஆதரிப்பதினும் பார்க்க, ஒரு மாதின் வடிவைக் காம அவாவொடு கருதுவதினும் பார்க்க, உன் கண்களைப் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கோல்களால் குடைதலும் மிக நன்று.

*   *   *   *

நன்றே உடலின் அடக்கம், நன்றே உரையின் அடக்கம், நன்றே உள்ளத்தின் அடக்கம், நன்றே அடக்கம் எங்கணும். ஒவ்வொன்றிலும் அடக்கம் பெற்ற துறவி துயரனைத்தினின்றும் விடுபடுகிறான்.

*   *   *   *

கையிலும், காலிலும், வாக்கிலும், மிக உயர்ந்ததிலும் (தலையிலும்) அடக்கமுடையவன்; தியானத்தில் இன்புற்று அமைதியாயிருப்பவன்;

தனிமையில் மனத்திருத்தியோடு இருப்பவன் — அன்னோனைப் பிக்ஷு (துறவி) என்பர்.

* * * *

மனத்தின் மீதும் உடலின் மீதும் எள்ளளவும் 'யான், எனது' அற்றவன், பெறுதவற்றுக்காகத் துயருறுதவன்,— அன்னோன் மெய்யாகவே பிக்ஷு (துறவி) எனப்படுவான்.

* * * *

தனியான இடத்திற்கு ஏகி, தன் உள்ளத்தைச் சாந்தப்படுத்தி, அறத்தினைத் தெளியக் காண்போன் மனிதனுக்குரிய எல்லையை மீறிய ஆனந்தத்தைத் துய்ப்பான்

* * * *

பிறரொடு பழகுங்கால் பிரியமாயும், நடத்தையில் நாகரிகம் உடையனாயும்

அவன் ஒழுகட்டும்; இன்பம் பெருகி, அவன் அதனால் துன்பத்தைத் துடைத்து விடுவான்.

* * * *

மல்லிகைக் கொடி வாடிய மலர்களை உதிர்த்து விடுதல்போல், துறவிகளே, நீங்கள் காமத்தையும் பகைமையையும் முற்றிலும் உதிர்த்துவிடவேண்டும்.

* * * *

இளமை கழியுமுன் புத்தரின் போதனைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வோன், மேகத்தினின்றும் விடுபட்ட மதியைப்போன்று உலகின்மீது ஒளி சொரிவான்.

* * * *

தவருகப் பற்றப்படும் ஒரு குசப்புல் கையையே அறுத்துவிடல்போல்,

துறவியின் வாழ்வும், தவறாகப் பற்றப் படுமாயின், ஒருவனை நரகிற்கு இழுத் துச் செல்லும்.

* * * *

இன்னா செய்யா இருடியர் தாமே
மன்னிய அடக்கம் வாய்த்தலின்
உடலில்,
அமர நிலையினை அடைகுவர்
அமர்ந்தபின் என்றும் அறியார்
சோகமே.

## பிரசாரகர்

அருட்பெருங் குரவர் தம் சீடர்க்குப் பகர்ந்தனர் :

யான் மறைந்தமையால், உங்கள் முன்னிலையில் அமர்ந்து பேசவும், அறவுரை வழங்கி உங்கட்கு ஞானநலன் ஊட்டவும் இயலாத நாள் வரும்போது, உங்கட்குள்ளே நற்குடிப் பிறப்பும் கல்வியும் வாய்ந்தோரைப் பொறுக்கி, எனக்குப் பதிலாக உண்மையைப் போதிக்கும்படி செய்க.

* * * *

இப்பெருமக்களைத் ததாகதருடைய (புத்தருடைய) 'ஆடைகளை அணியச் செய்தபின், ததாகதருடைய உறைவிடம் புகுந்து அவர்கள் ததாகத

ருடைய பிரசங்க மேடையில் அமரட்டும்.

*    *    *    *

ததாகதருடைய ஆடையாவது: விழுமிய மன்னிப்பும் பொறையும். அவருடைய உறைவிடமாவது: ஈகையும், அனைத்துயிர்மீதும் அன்பு செலுத்தலும். அவரது பிரசங்க மேடையாவது: நல்லறத்தின் பண்பையும், அதனைக் குறித்தவிடத்துப் பயன்படுத்தும் முறையையும் பற்றிய அறிவே.

*    *    *    *

பிரசாரகர் சுருங்காத உள்ளத்தொடு உண்மையை உணர்த்தவேண்டும். அறத்திலும், தமது பிரதிக்கினைகளினின்றும் பிறழாத நன்றியிலும், அவரது உணர்வின் திறன் வேரூன்றியிருத்தல் வேண்டும்.

*    *    *    *

பிரசாரகர் தமக்குரிய வட்டாரத்துள் நின்று, தமது நெறியில் மாரு உறுதியொடு செல்லவேண்டும். நல்லார் இணக்கத்தை நாடுதலால் தமது பெருமையினை வளர்த்திடல் கூடாது. சிறுமையுற்ற ஒழுக்கங்கெட்ட மக்களோடு இணங்குதலும் தகாது. இச்சையின் கவர்ச்சிக்கு உள்ளாகும் போதும், அவர் புத்தரை ஓயாது நினைக்க வேண்டும்; அதனுல் வெற்றி பெறுவார்.

* * * *

அறங்கேட்க வருவோர் அனைவரையும் பிரசாரகர் நல்லெண்ணத்தோடு வரவேற்கவேண்டும். அவரது பிரசங்கம் எவரையும் புண்படுத்தாதவாறு அமையவேண்டும்.

* * * *

பிரசாரகர் பிறரைக் குறைகூறவோ, ஏனைய பிரசாரகர்களைக் குற்றஞ்சாட்டவோ விரும்பலாகாது; பழி தூற்றவோ, கசப்பு மொழிகளைப் பரப்பவோ கூடாது. ஏனைய சீடர்களை இகழ்தற்கோ, அவர்களுடைய நடத்தையை நிந்தனை செய்தற்கோ அவர்களுடைய பெயர்களை உரைக்கக் கூடாது.

* * * *

பிரசாரகர் திறனும் மகிழ்வுடன் இணைந்த நம்பிக்கையும் மிக்காராய், ஒருபோதும் சோர்வுறாதவராய், இறுதியில் வெற்றி பெறுவதைப்பற்றிய அவ நம்பிக்கைக்கு ஒருகாலும் ஆளாகாதவராய் இலகுதல் வேண்டும்.

* * * *

சண்டையை விளைக்கும் வழக்குகளில் அவர் மகிழ்வடையக் கூடாது;

தமது மேதையின் மேன்மையைக் காட்டும் வாதங்களிற் புகக்கூடாது; இவற்றுக்கு மாருக, அமைதியோடும் அடக்கித்தோடும் இருத்தல் வேண்டும்.

* * * *

பகைமை உணர்ச்சிகள் அவருடைய நெஞ்சில் உறையக்கூடாது; எல்லா உயிர்களிடத்தும் அன்புடன் ஒழுகும் இயல்பை ஒருநாளும் அவர் கைவிட லாகாது.

* * * *

பொது மக்கள் மெய்ம்மொழிகட்குச் செவிசாய்க்காதவரை, அவர்களுடைய நெஞ்சங்களில் ஆழமிக்க இடங்களில் தோண்டுதல் வேண்டும் என்பதைப் பிரசாரகர் அறிவார்; அவர்கள் தமது மொழிகட்குச் செவி சாய்க்கத் தொடங்கும்போது அவர்

கள் விரைவில் ஞான விளக்கம் எய்தப் பெறுவர் என்பதை அறிகிறார்.

* * * *

ததாகதரின் மொழிகளைப் போதிப் பதாகப் பிரதிக்ஞை கொண்டுள்ள, நற்குடிப் பிறப்பும் கல்வியும் வாய்ந்த மக்களே, உங்கள் கைகளில் அருட் குரவர் (புத்தர்) மெய்ம்மையாம் நல் லறத்தை ஈந்து, ஒப்பித்துப் பாது காக்குமாறு அருளுகிறார்.

* * * *

மெய்ம்மையாம் நல்லறத்தை ஏற் றுக்கொண்மின், வைத்துக்கொண் மின், படித்து மீண்டும் படிமின், அதன் ஆழங்காண்மின், வாய்ப்பறையறை மின், இப்பிரபஞ்சத்தில் எண்டிசை வாழும் உயிர்கட்கெல்லாம் போதித் திடுமின்.

* * * *

ததாகதர் பற்றுள்ளம் (உலோபக் குணம்) அற்றவர், ஒடுங்கிய உள்ளம் அற்றவர், பூரண புத்த-ஞானத்தை ஏற்கச் சித்தமாய் இசைவுடையராய் இருப்பார்க்கெல்லாம் அருளும் மன முடையராவார். நீங்களும் அவரைப் போன்று இருங்கள். அவரை அனு சரியுங்கள் (அவர் செய்வது போன்று செயல் இயற்றுங்கள்), உண்மையை உதாரமாகக் கொடுத்தலிலும், காட்டு வதிலும், வழங்குவதிலும் அவரையே மாதிரியாகப் பின்பற்றுங்கள்.

* * * *

அறத்தைப்பற்றிய நலமிகும் ஆறு தல் மொழிகட்குச் செவிசாய்க்கும் விருப்பமுடையாரை உங்களைச் சுற்றித் திரட்டுங்கள்; நம்பிக்கையற்றவர் களை, உண்மையை ஒப்புக்கொள்ளும் படிக்கும், அவர்களது உள்ளத்து மகிழ் வும் ஆனந்தமும் ததும்பும்படிக்கும்,

எழுப்பிவிடுங்கள். அவர்களை ஊக்குங்கள், அவர்கட்கு ஞான நலனை ஊட்டுங்கள், மேலும் மேலும் அவர்களை உயர்த்தி, உண்மையின் முழுப்பிரகாசமும் அளப்பரும் சீரும் துலங்க அதன் நேர் காட்சியைப் பெறுமாறு செய்யுங்கள்.

* * * *

பயனிலாச் சொற்கள் ஓர் ஆயிரத்தினும் பார்க்க, கேட்டதும் நெஞ்சைக் குளிர்விக்கும் பயனுற்ற ஒரு வாக்கியமே மிக நன்றாம்.

* * * *

துறப்பர் அனைத்தையும் சிறப்புறும் நல்லோர்.
ஆரா அவாவுடன் தீரர் பகர்ந்திடார்.
இன்பதுன் பங்கள் எய்திடுங் காலை
களிப்போ சோர்வோ காட்டார் அறிஞர்.

# பல்வகை

தெளிந்தெழு கனவு; விளம்பம்
ஒழித்திடு;
திறந்துவை நெஞ்சம் சிறந்தமெய்
உட்புக.
அறநெறி பழகுக, அழியா இன்பம்
இறனுறக் குடிபுகும் சிந்தையுள்
யாண்டும்.

* * * *

மேன்மையான எட்டங்க நெறியிற் செல்லும் ஒவ்வொருவனுலும் ஞான வாழ்க்கையின் இன்பம் பெறுதற்குரிய தாகும். செல்வத்தை இறுகப் பற்றி நிற்பவன், நெஞ்சிற்கு நஞ்சூர இடந்தருவதினும் அதனைத் தூர எறிந்துவிடல் நன்று; ஆனால் செல்வத்திற் பற்றுவையாதவன் செல்வம் பெற்றிருந்தும் நல்வழியிற் பயன்

படுத்துவோன், மன்னுயிர்க்கு ஒரு பாக்கியமாவான்.

*    *    *    *

நான் உனக்குச் சொல்வதைக் கேள்: நீ வாழும் நிலையிலே அமர்ந்து, உன் முயற்சிகளிலே உன்னைச் சுறு சுறுப்பாக ஈடுபடுத்திக்கொள். வாழும் நிலையும், செல்வமும், அதிகாரமும் ஒருவனை அடிமையாக்கமாட்டா; வாழும் நிலையிலும், செல்வத்திலும், அதிகாரத்திலும் கொள்ளும் பற்றே அடிமையாக்கும்.

*    *    *    *

உள்ளிருந்து உணர்ச்சி எழுந்து அவ்வாறு செய்யும்படித் தூண்டினாலன்றி, ஒருவன் வீடுவாசலற்ற நிலையினை மருவவேண்டுமென்றோ, உலகத்தைக் கைவிட்டுவிட வேண்டுமென்றோ ததா

கதரின் அறம் கட்டாயப்படுத்துவ தில்லை; ஆனால் ஒவ்வொருவனும் தானெனும் மித்தையினின்றும் விடுவித்துக்கொள்ளவேண்டும் என்றும், தனது நெஞ்சைத் தூய்மைப்படுத்த வேண்டும் என்றும், சிற்றின்ப வேட்கையைத் துறக்கவேண்டும் என்றும், செந்நெறி வாழ்வைப் பற்றவேண்டும் என்றும் ததாகதரது அறம் பணிக்கின்றது.

* * * *

நன்றும் தீதும் ஆய நம் செயல்கள் நிழல்களைப்போன்று நம்மை இடைவிடாது தொடர்ந்து வருகின்றன.

* * * *

ஞானவான்கள் அனைவரும் உடலின் பங்களை உதைந்து தள்ளுவர். அவர்கள் காமத்தை அருவருத்து, தம்

ஞான வாழ்வை வளர்க்க நாடுகின்றனர்.

* * * *

ஒரு மரத்தே கோரமான தீப்பற்றி எரியுங்கால் பறவைகள் ஆங்கே குழுமுவது எங்ஙனம்! காமமும் சினமும் வாழுமிடத்தே மெய்ப்பொருள் உறையமாட்டாது.

* * * *

காமமெனும் வெள்ளம் யாவர்க்கும் பொதுவான ஓர் அபாயமாம்; உலகத்தை அது அரித்துச் செல்கிறது. அதன் சுழிகளிலே சிக்கிக்கொண்டவர் தப்புவதில்லை. ஆனால் ஞானம் உய்த்தற்கெளிய தோணியாம், இந்தனையே சக்காரும். உன்னுயிரை மாரன் எனும் பகைவனின் தாக்குதலுக்கு ஆளாகாதவாறு காத்துக்கொள்ளும்.

வண்ணம் சமயக் கூக்குரல் உன்னை அழைக்கின்றது.

* * * *

நம் செயல்களின் விளைவுகட்குத் தப்பிப் பிழைத்தல் இயலாதாதலின், நற்செயல்களைப் பழகிவருவோமாக.

* * * *

அற ஒழுக்கத்தாலும், யுக்திப் பயிற்சியாலும் உண்மையான மேன்மையை வெளிக்காட்டுக ; உலகப் பொருள்களின் இடம்பத்தைப்பற்றி ஆழ்ந்து சிந்தனைசெய்து, வாழ்வின் நிலையாமையை அறிக.

* * * *

பிறர் குற்றம் எளிதே புலப்படும் ; ஆனால் தன் குற்றமோ புலனாதற்கு அரிதாகும். அயலார் குற்றங்களை

உமிபோன்று புடைத்தெடுப்பான்; ஆனால் தன் சொந்தக் குற்றத்தையோ மறைத்துக் கொள்வான்; வஞ்சகன் தன்னோடு- சூதாடுபவனிடமிருந்து பொய்யான காயை மறைப்பதுபோல.

* * * *

இருதிறத்தார் கூற்றுகட்கும் பொறுமையொடு கூர்ந்து செவிசாய்ப்பாயாக. இரண்டையும் நிறுத்துக் காண்பவனே ஒரு முனியெனப்படுவான். இருதிறத்தாரும் தம் தம் கட்சியை எடுத்துவ்ரைப்பின், சங்கம் ஒரு முடிவுக்கு வந்து, சமரஸத்தை நிறுவி, அதனைக் கூறட்டும்.

* * * *

சினத்தொடு செப்பிடும் ஒரு மொழி மிகக் கூரிய வாளாகும்; உலோபம் (பற்றுள்ளம்) மிகக் கொடிய நஞ்சாம்;

காமம் உக்கிரஞ் செறிந்த கனலாம்; அறியாமை இருள் கூர்ந்த இரவாம்.

* * *

அறியாமை உலகின் அழிவை விளைக்கும். பொறுமையும் சுயநயமும் நட்பை முடித்துவிடுகின்றன. பகையே மிகத் தீவிரமான சுரமாம். புத்தரே மிகச் சிறந்த மருத்துவர்.

* * * *

நீதிமானை இகழ்ந்துரைக்கும் ஒரு தீயோன் மேலே நிமிர்ந்து பார்த்து வானத்தில் துப்புபவனைப் போன்றவன்; எச்சில் வானத்தை மாசுபடுத்தாது, ஆனால் மீண்டு அவனது சொந்த உடலையே அழுக்காக்கும்.

* * * *

எவனும் பிறனை ஏமாற்றவேண்டா,

எவனும் பிறனை இகழ வேண்டா, எவனும் சினத்தாற் பிறனுக்குத் தீங்கு செய்ய விரும்ப வேண்டா.

*  *  *  *

தனது காமங்கள் அழியப் பெற்றவன், அகந்தையினின்றும் விடுபட்டவன், பேரவாவின் வகைகள் அனைத்தையும் வென்றவன், அடக்கமுடையோனாய், முழு இன்பம் பெற்றவனாய், உறுதியுள்ள மனத்தனாய் இருப்பான். அத்தகையோன் உலகிலே நேரான நெறியிற் செல்லுவான்.

*  *  *  *

நம்பிக்கையும் நல்லொழுக்கமும் நிறைந்து, புகழும் பொருளும் படைத்திருப்பவன், செல்லுமிடத்தெல்லாம் எங்கணும் மதிப்பைப் பெறுவான்.

*  *  *  *

வேர்கள் தீங்கின்றி உறுதியாய் அமையப்பெற்ற ஒரு மரம், வெட்டியெறியப்பட்டாலும் மீண்டும் முளைத்து மேலெழும்; அதுபோன்றே, கரந்துள்ள அவாவை வேரொடு மாய்க்காதவரை, இத்துயரம் மீண்டும் மீண்டும் தழைக்கும்.

*   *   *   *

எவனொருவன் இவ்வுலகில் இந்த இழிவான அடங்காத வேட்கையை வெல்லுகிறானோ, அவனிடமிருந்து துயரங்கள் நழுவிவிடும்; தாமரையிலையினின்றும் தண்ணீர்த் துளிகள் ஓடிவிடுவதுபோல.

*   *   *   *

நீங்களே முயற்சி செய்ய வேண்டும். ததாகதர்கள் குரவரேயாவர். அறநெறிச்செல்லும் தியான விழைவுடை

யார் மாரனின் தளைகளினின்றும் விடுவிக்கப்படுவர்.

* * * *

இரும்பினின்றும் பிறக்கும் துரு கிளம்பிய பின் தன்னைத்தானே அரித்துவிடுவதுபோல, அறத்தை மீறுபவனை அவன் செயல்களே துயர நிலையின்கண் உய்த்துவிடும்.

* * * *

முற்றும் இகழப்பட்டவனோ, முற்றும் புகழப்பட்டவனோ, ஒருபோதும் இருந்ததில்லை, ஒருபோதும் இருக்கப் போவதும் இல்லை, இப்போது இருக்கவுமில்லை.

* * * *

உடல் நலம் மிகவுயர்ந்தபேறு; போதுமென்றிருத்தலே மிகப்பெருஞ்

செல்வம்; நம்பிக்கைக்குரியராவார் மிகச் சிறந்த உறவினர்; நிர்வாணமே பரமசுகம்.

* * * *

வெற்றி பகைமையை ஈனும்; தோற்றோர் வருத்தத்தோடு வாழ்வார். சாந்தியுற்றவர் வெற்றி தோல்விகளைக் கைவிட்டு ஆனந்தமாக வாழ்வார்.

* * * *

காமமனைய தீ வேறில்லை, பகைமையனைய தீவினை வேறில்லை, உடலைப் போன்ற கேடு வேறில்லை, நிர்வாணத்தினும் உயர்ந்த இன்பமும் வேறில்லை.

* * * *

வெந்துயர் சுமக்கும் ஐம்புலச்
சிறையிலை
ஆக்கிய அவனை அனுதினம் நாடும்

என்னை வாழ்வில் இல்லம் பலப்பல
அடைத்தன ; வெவ்விதென் அகலாப்
போரே.
இன்றே கேட்டி இவ்வுடல் தன்னை
ஆக்கித் தருவோய் அறிந்தேன்
நினையான் ;
துன்பமாய் இந்தச் சுவர்களை இனி நீ
படைக்கா தொழிக ; கெடுக்கும்
வஞ்சனை
யெனும்பேர் உத்தரம் இனியுயர்த்
தாதே ;
மட்சுவர் மீது வையா தொழிக
விட்டம் பலவும் ; நின் வீடோ
இடிந்தது,
உத்தரம் வெடித்தது ; ஊறிய மயக்கம்
மெத்திப் படைத்தது, இவ் வீட்டினை
நீத்து
நடுக்கறச் செல்வேன் விடுதலை
பெறவே